களுக்கு மாத்திரம் 2 ஸ்தானங்கள் ஒதுக்கியிருக்கிறார்கள். ரிசர்வ் சீட் என்பதே இல்லாமல் ஜெனரல் சீட்டாக 34 வார்டுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கமிட்டியில் நான் எவ்வளவோ எதிர்த்தும், ரிசர்வ் சீட் கொடுத்தாக வேண்டும் என்று சொன்னதற்கு, அப்படி ஒன்றும் நகரசபையைப் பொறுத்தவரையில் அமைக்கவேண்டிய அவசியம் இல்லை என்று மெஜாரிடியினர் சொல்லிவிட்டார்கள், ஹரிஜனங்கள் மெஜாரிடியாக இருக்கக் கூடிய இடத்தையே அவர்களுக்குக் கொடுத்துவிடலாம், அந்த இடத்திலிருந்து ஜெனரல் சீட்டிலேயே வரட்டும் என்று சொல்லிவிட்டார்கள். ஜாதி இந்துக்கள் இருக்கும் இடத்தில் கூட அவர்கள் வந்துவிடமுடியும், அவர்களுக்காக தனி இடம் ஒதுக்கவேண்டிய அவசியம் இல்லை என்று சொல்லிவிட்டார்கள். இந்த விதமாக வேலூர் முனிசிபாலிடி சம்பந்தப்பட்டவரையில் இப்பொழுது ஏறக்குறைய 15 வார்டுகளுக்குமேல் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இதை யெல்லாம் பார்த்தால், உண்மையிலேயே ஒரு கட்சியார் தங்களால் முடிந்த வரையில் ஸ்தானங்களைக் கைப்பற்றித் தீரவேண்டும் என்ற ஒரு காரணத்திற்காகத்தான் இம்மாதிரி செய்து கொண்டு வருகிறதே தவிர, உண்மையிலேயே ஒரு நகரத்தை நல்லபடி நடத்த வேண்டும் என்ற காரணத்திற்காக இல்லை என்று நன்றாகப் புலப்படுவதால், இப்பொழுதிருக்கும் முனிசிபல் கவுன்சில்களை நவம்பர் முதல் தேதியிலிருந்தே எடுத்துவிட்டு, புதுக் கவுன்சில்கள் ஏற்படுத்தும் வரைக்கும் அவைகளைக் கமிஷனர்களே நிர்வகித்து வரலாம் என்று கூறிக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கின்றேன்.

(Mr. Speaker in the Chair.)

## IV.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER *RE* THE BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER : I want to make two announcements to the House. The Business Advisory Committee which just met today has decided that the Panchayats Bill which was scheduled to be taken up on the 23rd instant may be taken up on the 22nd.

பஞ்சாயத்து மசோதாவை 23-ந் தேதி எடுத்துக்கொண்டு விவாதிக்க வேண்டும் என்று முதலில் தீர்மானித்திருந்தோம். ஆனால், 23-ந் தேதி எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக, 22-ந் தேதியே அதை எடுத்துக்கொள்ளலாம் என்று அலுவல் ஆலோசனைக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

சென்னை வெயிட்ஸ் அண்ட் மெஷர்ஸ் என்போர்ஸ்மெண்ட் மசோதாவையும் சென்னை பப்ளிக் ஹெல்த் மசோதாவையும் 22-ந் தேதியன்று எடுத்துக் கொள்வதாக இருந்தோம். அவைகளை 27-ந் தேதியன்று எடுத்துக் கொள்ளலாம் என்று இப்பொழுது தீர்மானித்திருக்கிறோம்.

இப்பொழுது சபை முன் இருக்கும் சென்னை ஜில்லா அபிவிருத்திக் கவுன்சில்கள் மசோதாவின் மீது பொது விவாதம் முடிந்த பிறகு, ஷரத்து வாரி விவாதத்தையும் நடத்தி, மசோதாவை நிறைவேற்றிவிட்டு, சென்னை நகர முனிசிபல் (திருத்த) மசோதாவையும் எடுத்துக்கொண்டு, பொது விவாதத்தை இன்றைக்கு முடித்து விடுவோம். இதன் மீது ஷரத்துவாரி விவாதத்தை நாளைக்கு வைத்துக்கொள்ளலாம்.

நாளைக்கு, உணவு விவாதம் மூன்று மணி நேரம் நடந்தால் போதும் என்று எல்லோரும் சொன்னார்கள். மூன்று மணி நேர உணவு விவாதத்திற்குப் பிறகு, சென்னை நகர முனிசிபல் (திருத்த) மசோதாவின் மீது ஷரத்துவாரி விவாதம் நடக்கும். தேவையானால் பிற்பகலிலும் மூன்று மணியிலிருந்து 5 மணி வரைக்கும் உட்கார்ந்து ஷரத்துவாரி விவாதத்தை முடித்துவிட வேண்டுமென்றும் அலுவல் ஆலோசனைக் கமிட்டி முடிவு செய்திருக்கிறது.

9th September 1958]  [Mr. Speaker]

பஞ்சாயத்து மசோதாவை 23-ந்தேதி எடுத்துக்கொள்வதாக இருந்தால் 20-ந் தேதிவரை திருத்தம் கொடுக்கலாம் என்று சொல்லியிருந் தேன். 22-ந் தேதியே அம்மசோதாவை எடுத்துக்கொள்ளவேண்டு மென்று இன்று முடிவு செய்திருப்பதால், 19-ந்தேதி பிற்பகல் நான்கு மணிக்குள்ளாக இதற்கான திருத்தங்களை கனம் அங்கத்தினர்கள் கொடுத்துவிடவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கின்றேன்.

III.—GOVERNMENT BILLS—*cont.*

THE MADRAS DISTRICT MUNICIPALITIES (AMENDMENT) BILL, 1958—*cont.*

* SRI A. GOVINDASAMY : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, முனிஸிபாலிட்டி தேர்தலை நடத்துவதற்கு ஆறு மாத காலம் தள்ளிப் போட வேண்டுமென்ற அவசியம் இல்லையென்ற கருத்தை நானும் வலி யுறுத்த விரும்புகிறேன். பஞ்சாயத்து தேர்தலை நடத்த வேண்டியிருப்ப தால், முனிஸிபல் தேர்தலைத் தள்ளிப்போட வேண்டியிருக்கிறது என்று சொல்கிறார்கள். பஞ்சாயத்துத் தேர்தலை நடத்துகிறவர்கள் வேறு, முனிஸி பாலிட்டி தேர்தலை நடத்துகிறவர்கள் வேறு. ஒன்றுக்கு ஒன்று தள்ளிப் போடவேண்டிய அவசியம் இல்லை என்பதை நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். பஞ்சாயத்துத் தேர்தலை, பஞ்சாயத்து ஆபீசர்களும், ஜில்லா போர்டுகளில் உள்ள குமாஸ்தாக்களும் நடத்துகிறார்கள். முனிசி பல் தேர்தலை முனிசிபல் கமிஷனரும், அங்குள்ள குமாஸ்தாக்களும் நடத்துவதால் ஒன்றுக்கொன்று என்ன இடையூறு ஏற்படும் என்று கேட்கிறேன். ஆகையால் பஞ்சாயத்துத் தேர்தல், முனிஸிபல் தேர்தலுக்கு இடையூறாக இருப்பதாகச் சொல்ல வேண்டாம் என்று கேட்டுக்கொள் கிறேன். இந்தக் காரணத்திற்காக இப்போது ஆறு மாத காலம் ஒத்தி வைப்பதாகச் சொன்னால் இந்த ஆறு மாதங்களுக்குள் பஞ்சாயத்து தேர்தல் எல்லா இடங்களிலும் முடிந்துவிடும் என்று சொல்ல முடியாது. ஆகவே அப்புறம் நடக்கவில்லை யென்று சொல்லி மேலும் தள்ளிப் போடுவார்களோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் எல்லா இடங்களிலும் 1959 ஜனவரி 31-ந் தேதிக்குள் முனிஸிபல் தேர்தல் நடந்து முடிந்துவிட்டால் நல்லது என்று கருதுகிறேன்.

(Deputy Speaker in the Chair.)

மேலும் வோட்டர் லிஸ்டைத் திருத்த வேண்டுமென்ற கருத்தை நண்பர் விநாயகம் அவர்கள் வலியுறுத்தினார். வோட்டர் லிஸ்டில் அதிகத் தவறு இருக்கிறது என்பது உண்மை. உயிரோடு இருக்கிறவர்களை இறந்தவர் களுடைய ஜாப்தாவில் சேர்த்திருப்பதும், இறந்தவர்களை உயிரோடு இருப் பவர்களோடு சேர்த்திருப்பதும் போன்று அதில் தவறுகள் அதிகம் இருக்கின்றன. குறிப்பாக ஸ்ரீ கே. அன்பழகன் அவர்களுடைய பெயர் இறந்தவர்களுடைய ஜாப்தாவில் சேர்க்கப்பட்டு அதன் காரணமாக பல சிக்கல் எழுந்தது. ஹைக் கோர்ட் வரையிலும் சென்று உத்தரவு வாங்கி வந்த பிறகுதான் நாமினேஷன் அவர் பைல் பண்ணும்படியான சங்கடம் உண்டாயிற்று. ஆகையால் உடனடியாக வோட்டர் லிஸ்டைத் திருத்த வேண்டும். அதோடு வோட்டர் லிஸ்டைத் திருத்த வேண்டுமென்ற கார ணத்தைக் காட்டி மேலும் தேர்தலை ஒத்தி வைத்துக்கொண்டு போகாமல் மூன்று மாதத்திற்குள்ளாக அந்தக் காரியத்தை கனம் அமைச்சர் அவர்கள் முடித்துத் தர வேண்டும். அதோடு வோட்டர் லிஸ்டைத் தயாரிக்கிறவர்கள் ஆசிரியர்கள். அவர்கள் அதிக மனச் சங்கடத்தோடு வேலை செய்கிறார்கள். அவர்களுக்கு அதிகப்படி ஸ்பெஷல் அலவன்சு கொடுத்து இவ் வேலையில் அவர்கள் உற்சாகத்துடன் பிழை எதுவும் வராமல் வேலை செய்யும்படி யாகவும் பார்த்துக் கொள்ளவேண்டும். ஆகையால் எந்தக் காரணத்தை கொண்டும் தேர்தலை ஒத்திப்போடாமல் 1959-ம் வருஷம் ஜனவரி மாதம 31-ந் தேதிக்குள் தேர்தலை நடத்தித் தர வேண்டுமென்ற உத்தரவாதத்தை கனம் அமைச்சர் அவர்களிடம் நான் எதிர்பார்த்து இதை வலியுறுத்திக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

[9th September 1958

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்போது முனிஸிபாலிடி தேர்தலை ஆறு மாதம் தள்ளி வைக்க வேண்டும் என்பதைப்பற்றி விவாதம் நடக்கிறது. அதைப் பற்றி நாங்களும் ஆலோசித்தோம். இப்போது ஆறு மாதம் தள்ளி வைப்பதைப் பற்றி ஆட்சேபணை இல்லை. வோட்டர் லிஸ்ட்டும் திருத்த வேண்டியிருக்கிறது. அதையும் நல்ல முறையில் திருத்த, தேர்தல் நன்முக நடைபெற வேண்டும் என்பதுதான் அங்கத்தினர்களுடைய எண்ணம். ஆனால் அங்கத்தினர்களுடைய மனதில் என்ன இருக்கிறதென்றால் இந்த ஆறு மாதங்களுக்குப் பிறகு மறுபடியும் இந்தத் தேர்தலை ஒத்தி வைக்க வேண்டுமென்ற தீர்மானத்தோடு சர்க்கார் முன்வருவார்களோ என்கிற பீதி இருக்கிறது. அப்படி இல்லாமல் இந்த ஆறு மாதத் தவணைக்குள்ளாகவே வோட்டர் ஜாபிதாவையும் திருத்தி, முனிசிபல் தேர்தல் நல்ல முறையில் நடைபெறுவதற்கு அரசாங்கம் தக்க நடவடிக்கையை எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கான உறுதிமொழியை அமைச்சர் அவர்கள் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் நோக்கம் முனிசிபல் தேர்தலை ஆறு மாதங்களுக்கு ஒத்திவைப்பது என்பதுதான். இதைப்பற்றி அங்கத்தினர்கள் பேசும்போது நகர சபையில் இன்னும் செய்ய வேண்டிய சில சீர்திருத்தங்களைப்பற்றியும், தேர்தல் காலங்களில் நடக்கும் துன்பங்களைப்பற்றியும் பேசினார்கள். அதிலும் வார்டுகளைப்பற்றியும் பேசினார்கள். வார்டுகளைப் பிரிப்பது என்பது முனிசிபல் கவுன்ஸிலர்கள் எல்லோரும் சேர்ந்து அவர்களுடைய அபிப்பிராயத்தோடுதான் பிரிக்கப்படுகிறது. மேலும் வோட்டர் லிஸ்டில் அநேக தவறுகள் இருக்கின்றன என்பதைப் பற்றியும் எடுத்துக் கூறினார்கள். இது யாவரும் அறிந்த விஷயம்தான். இது நிர்வாகத்தின் குற்றம் அல்ல. பிரிண்ட்டர்ஸ் டெவில் என்கிறபடி, அச்சுப் பிழைகளின் காரணமாக அந்தத் தவறுகள் நிகழ்கின்றன. அதிலுள்ள தவறுகளைத் திருத்திக்கொள்ள சந்தர்ப்பம் கொடுக்கப்படுகிறது. அந்தப் பிரச்னைகளை எல்லாம் இப்போது எழுப்ப வேண்டிய அவசியம் இல்லையென்று நினைக்கிறேன். இன்றுள்ள பிரச்னை முனிஸிபல் தேர்தலை ஆறு மாதங்கள் தள்ளி வைப்பதுதான். இந்த ஆறு மாத காலத்திற்குள் அதை நல்ல முறையில் நடத்துவதற்குத் தக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள முடியும் என்பதற்காகத்தான் இந்த அவகாசம் கேட்கப்படுகிறது. ஆகவே இதை அங்கத்தினர்கள் எல்லோரும் ஆதரிக்க வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். அதோடு இன்னும் சில அங்கத்தினர்கள் பஞ்சாயத்து தேர்தல் நடந்தால் முனிஸிபல் தேர்தல் நடக்கக் கூடாதா என்று கேட்டார்கள். இந்தத் தேர்தல் விஷயம் ஒரே இலாகாவினால் கவனிக்கப்படுகிறது. உத்தியோகஸ்தர்கள் இரண்டையும் ஒரே சமயத்தில் கவனிப்பது என்பது சரியாகாது. இவ்வாறு இருக்கிற காரணத்தினால்தான் காலதாமதம் ஏற்படுகிறது. ஆகையால் ஆட்சேபம் இல்லாமல் இந்தக் கோரிக்கையை ஏற்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : I shall now put the motion to vote. The question is :

"That the **Madras** District Municipalities (Amendment) Bill, 1958, be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

SRI S. PAKKIRISAMI PILLAI : Sir, I move :

"*Delete* sub-clause (3)".

9th September 1958]

SRI N. MARUDACHALAM : I second the amendment.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move :

"In sub-clause (3), *for* the words 'thirtieth day of April, 1959' occurring in line 23, *substitute* the words 'thirty-first day of January 1959'."

SRI T. S. RAMASWAMY PILLAI : I second the amendment.

SRI K. ANBAZHAGAN : Sir, I move :

"In sub-clause (3), *for* the words 'thirtieth day of April, 1959' occurring in line 23, *substitute* the words 'thirty-first day of March 1959'."

SRI A. GOVINDASAMY : I second the amendment.

SRI S. PAKKIRISAMI PILLAI : என்னுடைய திருத்தத்தின் நோக்கம் இரண்டாவது க்ளாஸில் உள்ள மூன்றுவது உப விதியை நீக்கிவிட வேண்டும் என்பது. மூன்றுவது உப விதி அங்கே இருக்க வேண்டிய அவசியம் இல்லை. இப்போது கிராம பஞ்சாயத்துகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. கிராம பஞ்சாயத்து ஆனவுடன் அந்த ஜில்லாக்களிலே பஞ்சாயத்து யூனியன்கள் அமைக்கப்படும். அப்படி எல்லா ஜில்லாக்களிலும் பஞ்சாயத்து யூனியன்கள் அமைந்த பிற்பாடு எந்த ஒரு பகுதியில் பெரும் பகுதியாக இருந்து முனிசிபாலிட்டி அமைக்க வேண்டுமென்ற அவசியம் ஏற்படுகிறதோ அப்போது அங்கே முனிஸிபாலிட்டி அமைக்க நடவடிக்கை எடுக்க சாத்தியமாகும். எற்கனவே சில இடங்களில் அவ்வாறு அமைந்திருக்கிறது. ஆனுல் புதிதாக முனிசிபாலிட்டி அமைக்க வேண்டிய இடங்களில் சங்கடம் ஏற்படும். ஆகையால், தேதியை நிர்ணயிப்பது அவ்வளவு உசிதம் அல்ல. தேதியை நிர்ணயித்தால் அது பின்னுல் பல சிக்கல்களை உண்டுபண்ணும் என்று நினைக்கிறேன். மேலும், சில இடங்களில் வோட்டர் ஜாபிதாக்கள் மிகவும் மோசமாக இருக்கின்றன.

DEPUTY SPEAKER : The hon. Member need not speak about voters' list and all that. We are now dealing with clause 2. Let him confine himself only to the provisions of clause 2.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்த விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்கு நான் காரணம் கூறுகிறேன். வோட்டர் ஜாபிதாக்களிலுள்ள தவறுகளை யெல்லாம் திருத்தியாகவேண்டும். இந்த நிலையில், 1959-ம் வருஷம் எப்ரல் மாதம் முடிவிற்குள் தேர்தல்களை நடத்திவிட முடியும் என்று சொல்வதற்கில்லை. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் எதேனும் கிளர்ச்சி செய்யப்படுமேயானுல் இன்னும் கொஞ்ச காலத்திற்கு தேர்தல்களைத் தள்ளிப் போடுவதற்கு மசோதாவில் வகை செய்யவேண்டும். ஆகவே அந்தத் தேதியைக் குறிப்பிடும் பிரிவை மசோதாவிலிருந்து நீக்கிவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, 1959-ம் ஆண்டு ஜனவரிமாதம் முடிவிற்குள்ளேயே முனிசிபாலிடிகளின் தேர்தல்கள் எல்லாம் முடிவதற்கு வகை செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் என்னுடைய திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். காரணம், பிப்ரவரி, மார்ச் மாதங்களில் அந்தத் தேர்தல்கள் நடந்தால் சட்டசபை அங்கத்தினர்களுக்கு அசௌகரியம் ஏற்படும். அந்த மாதங்களில் சட்டசபையில் பட்ஜெட் விவாதம் நடக்கும். ஆகவே, ஜனவரி மாத முடிவிற்குள்ளாகவே இந்தத் தேர்தல்கள் முடிந்துவிடுமானுல், சட்டசபை அங்கத்தினர்களுக்கு மிகவும் சௌகரியமாக இருக்கும். பிரஸ்தாப தேதி இரண்டு மூன்று மாதங்கள் முன்போ பின்போ இருப்பதால் பெரிய சிக்கல் எதுவும்

ஏற்பட்டுவிடாது என்று நினைக்கிறேன். இந்தத் தேர்தல்கள் டிசம்பர், ஜனவரி மாதங்களில் நடக்குமானால், மிகவும் நன்றாக இருக்கும். ஆகவே என் திருத்தத்தை வலியுறுத்துகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, முனிசிபாலிடி தேர்தல்களை எந்தத் தேதிக்குள் முடித்துவிட வேண்டும் என்று காலவரையறை நிர்ணயிக்கக்கூடாது என்பது கனம் அங்கத்தினர் ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை அவர்களின் திருத்தத்தின் நோக்கம். அத் தேர் தல்களை, எவ்வளவு காலத்திற்கு வேண்டுமானாலும் ஒத்திப்போட்டு விட்டு சாவதானமாக நடத்திக்கொள்ளலாம் என்பது அவருடைய அபிப்பிராயம். ஆனால், ஸ்ரீ சட்டநாத கரையாளர் அவர்களோ, இந்தத் தேர்தல்களை 1959-ம் வருஷம் ஜனவரி மாத முடிவிற்குள்ளாகவே நடத்திவிடவேண்டும் என்று கூறுகிறார். தீர ஆலோசித்த பிறகே, 1959-ம் வருஷம் ஏப்ரல் 30-ம் தேதிக்குள் இத்தேர்தல்களை முடித்துவிடவேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது. ' ஏப்ரல் 30-ம் தேதி ' என்றால், எல்லாத் தேர்தல்களையும் 30-ம் தேதி நடத்தவேண்டும் என்று அர்த்தம் இல்லை. எல்லாத் தேர்தல் களையும் 1959-ம் வருஷம் ஜனவரி 30-ம் தேதிக்குள் முடித்துவிட வேண்டு மென்பதுதான் சர்க்காரின் நோக்கம். பிப்ரவரி-மார்ச் மாதங்களில் சட்ட சபைக் கூட்டம் நடக்கும் என்றும் அப்போது இத்தேர்தல்கள் நடந்தால் சட்டசபை அங்கத்தினர்களுக்கு அசௌகரியமாக இருக்கும் என்றும் ஸ்ரீ சட்டநாதகரையாளர் கூறினார். அந்தக் காலத்தில் சட்டசபைக் கூட்டம் நடக்கும் என்பது மனதிற்கொள்ளப்பட்டு அதற்கு முன்பாகவே தேர்தல் களை முடித்துவிடுவதற்கு உகந்த முறையில் தேர்தல்களை நடத்தவேண்டிய தேதிகள் நிர்ணயிக்கப்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். ஆகை யால், இந்தப் பிரிவை இப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இந்தத் திருத்தங்களை வலி யுறுத்தவேண்டாம் என்றும் இவைகளைப் பிரேரேபித்த அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

All the amendments were, by leave, withdrawn.

Clause 2 was put and carried.

*Clause 3.*

DEPUTY SPEAKER : The motion is :

' That clause 3 do stand part of the Bill '.

SRI K. ANBAZHAGAN : Mr. Deputy Speaker, Sir, I move the amendment standing in my name, namely :

" In sub-clause (*b*) for the words ' first day of November ', occurring in line 32, *substitute* the words ' first day of July '."

The amendment was duly seconded.

SRI K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய துணைத் தலைவர் அவர்களே, புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படும் முனிசிபல் கவுன்சிலர்களின் பதவிக்காலம், அவர்கள் பதவியேற்ற தேதியிலிருந்து மூன்று வருடங் களுக்குப் பிறகு அதாவது ஏப்ராலுக்குபின் வரும் நவம்பர் மாத முதல் தேதியன்று முடிவடையும் என்று மசோதாவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஏறத்தாழ 1959-ம் வருடம் ஏப்ரல் மாத முடிவிற்குள் முனிசிபல் கவுன் சிலர்கள் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்களானால், அவர்கள் பதவி யேற்ற நாளிலிருந்து மூன்று வருடங்கள் கழிந்த பிறகு அவர்களுடைய பதவிக்காலம் முடிவடையும் என்று கூறும் முறையில் சட்டம் இருப்பது நல்லதே தவிர, அவர்கள் பதவியேற்ற நாளிலிருந்து மூன்று வருடங்கள் கழிந்த பிறகு வரும் நவம்பர் மாத முதல் தேதியன்று அவர்களுடைய பதவிக்காலம் முடியும் என்று சட்டம் கூறுவது அவ்வளவு நல்லதல்ல

[9th September 1958] [Sri K. Anbazhagan]

என்று எனக்குத் தோன்றுகிறது. ஆகவே, சூழ்நிலைக்கு ஏற்பவும், இப்போதிருக்கும் நிலைமைக்கு ஏற்பவும், அந்தக் காலவரையறை 'ஜூலை முதல் தேதியில்' முடிய வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தத் திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன். இதைக் கவனிக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, 1959-ம் வருஷம் ஏப்ரலிலிருந்து மூன்று வருடங்கள் கழிந்தவுடன் 1962-ம் வருட ஏப்ரல் மாதம் வருகிறது. அப்போதுதான் இந்த சட்ட சபைக்கும் பொதுத் தேர்தல்களை நடத்த வேண்டியிருக்கும். அந்நிலையில், உடனடியாக முனிசிபாலிடித் தேர்தல்களை நடத்துவது கஷ்டமாக இருக்கும். புது மந்திரிசபையினர் வந்ததும் அவர்கள் எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து முனிசிபல் கவுன்சில்களின் தேர்தல்களை நடத்துவதற்கு வகை செய்யும் முறையில் சட்டமியற்ற வேண்டுமென்பதற்காகத் தான், இந்தத் தேதியை நிர்ணயித்திருக்கிறோமே தவிர, மூன்று வருடக்கால வரையறையை அதிகரிக்கவேண்டும் என்பது சர்க்காரின் நோக்கம் அல்ல. ஆகவே இந்தப் பிரிவை இப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

The amendment was, by leave, withdrawn.

Clause 3 was put and carried.

Clause 4 was put and carried.

Clause 1 and the preamble were put and carried.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move—

'That the Madras District Municipalities (Amendment) Bill, 1958, be passed'.

DEPUTY SPEAKER : The question is :

'That the Madras District Municipalities (Amendment) Bill, 1958, be passed.'

The motion was put and carried and the Bill was passed.

(5) THE MADRAS CITY MUNICIPAL (AMENDMENT) BILL, 1958.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Deputy Speaker, Sir, I beg leave to introduce the Madras City Municipal (Amendment), Bill[a], 1958, and move :

'That the Bill be taken into consideration'.

Sir, hon. Members know that the White Paper on the Reform of Local Administration in Madras State placed before this House in October last included among others, the provisional conclusions of Government regarding Madras City Corporation. The reforms contemplated in the White Paper fall under three broad heads :

(*a*) Reform of the composition of the Council and Council constituencies;

(*b*) Reorganisation of the Standing Committees and Re-settlement of their functions; and

(*c*) Reform of the system of appointment to Key-posts in the service of the Corporation.

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 30th September 1958.

[Srimathi Lourdhammal Simon] [9th September 1958

The Legislature Committee on Local Administration scrutinised the proposals in the White Paper including the amendments to the Madras City Municipal Act proposed by the Corporation of Madras, examined by the Secretariat Departments and appended to the White Paper with their comments. The Committee has accepted the major reforms proposed by the Government namely :

(i) Increasing the number of territorial divisions from 50 to 100, each as a single member constituency and grouping them so as to form 10 City Municipal Circles.

(ii) Abolition of Special Constituencies and reserved seats other than those intended for special representation for women and scheduled caste;

(iii) Abolition of system of Aldermen;

(iv) Reorganisation of Standing Committees and resettlement of their functions; and

(v) Reform of the system of appointment to Key posts in the service of the Corporation.

It did not accept the proposal to extend the term of office of Members from three years to five years. As regards representation of women and Scheduled Castes, the proposal in the White Paper was that all the divisional councillors of every circle should elect one woman councillor and one Scheduled Caste councillor if there is no women and Scheduled Caste councillor. The Legislature Committee has, however, recommended that six Harijans and six women councillors might be elected as members by means of single transferrable vote on proportional representation by the whole council, irrespective of the number of Harijans and women already elected to the Council by the electorate.

1–20 p.m. The ordinary elections to the Corporation of Madras are due this year and the term of office of the existing councillors will expire on the noon of 1st November, 1958, by efflux of time. Under Section 55-A of the Madras City Municipal Act, 1919, elections will have to be conducted during the months of August and September, 1958. The changes in the constituencies and composition of the Council of the Corporation proposed in the White Paper and accepted by the Legislature Committee can be effected only by legislation. If election is to be conducted on the usual dates, it cannot be done under the changed system. In order to conduct the elections under the new proposals, the Legislature Committee has recommended that the elections might be postponed by six months, that this six months' period should be only an outer limit and that elections should be held within that period having due regard to the requirements of administrative convenience.

The Bill embodies the proposals contained in the White Paper so far as they relate to constituencies and the composition of the Council of the Corporation and as approved by the Legislature Committee on Local Administration, except in regard to the representation for Harijans and Women. As regards the representation

9th September 1958] [Srimathi Lourdhammal Simon]

for Scheduled Castes and Women, the Government have considered that it is sufficient to provide for the co-option of 10 Members of Scheduled Castes by the Divisional Councillors, the number of councillors to be so co-opted being reduced by the number of members of Scheduled Castes already elected. The Government have also taken the view that no seats need be reserved for Women on the Council. Except for these changes, the Bill is, as approved by the Legislature Committee. I, therefore, move—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1958 be taken into consideration.'

DEPUTY SPEAKER: Motion moved—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1958, be taken into consideration.'

SRI N. MARUDACHALAM: Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1958, be referred to a Select Committee consisting of . . . . Members of the Assembly, with instructions to report before 20th September 1958'.

SRI V. K. KOTHANDARAMAN: Sir, I second it.

DEPUTY SPEAKER: Amendment moved—

'That the Madras City Municipal (Amendment) Bill, 1958, be referred to a Select Committee consisting of . . . . . . . Members of the Assembly, with instructions to report before 20th September 1958.'

Now the motion as well as the amendment are before the House for discussion.

SRI N. MARUDACHALAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மதருஸ் சிட்டி முனிஸிபல் சட்டத் திருத்தத்தைப்பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். மதருஸ் ஸிட்டியை 100 ப்ளாக்குகளாக பிரிப்பதாக அரசாங்கத்தின் நோக்கம். அப்படி 100 ப்ளாக்குகள் ஆனால் இப்பொழுதுள்ள கௌன்ஸிலர்களை விட அதிகக் கௌன்சிலர்கள் வருவதற்கு இடமிருக்கிறது. அப்பொழுது அதில் தாழ்த்தப்பட்ட மக்களிடத்தில் இருந்து 100-க்கு 25 பேர்களாவது இருக்கவேண்டும். பெண்களுக்கு 10 சதவிகிதம் கொடுக்கவேண்டும். இதுதான் என்னுடைய அபிப்பிராயம், என் வேண்டுகோளுங்கூட, இதன்படி இந்தச் சட்டத்தை திருத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த நகராண்மைக் கழக திருத்த மசோதாவில் ஒரு சிலவற்றை மாத்திரம் பற்றிக் கூறுவதற்கு அனுமதி கேட்கிறேன். நகராண்மைக் கழகச் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்று அதிக நாட்களாக ஒரு அவா இருந்து வந்தது. அதற்கேற்ப அரசாங்கமும் இதில் அதிகமான அக்கரைக் காட்டி சமீபத்தில் அதற்காக ஒரு பொறுக்குக் கமிட்டி வைத்து எந்தளவில் மாற்றங்கள் கொண்டு வர முடியுமோ அந்தளவு கொண்டு வர முயற்சி எடுத்திருக்கிறது. அது உண்மையில் வரவேற்கத்தக்கதே. அம்முயற்சியின் மேல், அதற்கு ஒரு சில திருத்தங்களை அவர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள். முதலாவதாக, எப்பொழுதும் சாதாரணமாக நகராண்மைத் தேர்தல் நவம்பர் மாதத்தில் முடிவடைந்து மேயர் தேர்தலும் நடக்கும்.

இன்று அதை மார்ச் வரையில் அரசாங்கம் ஒத்திபோட்டிருக்கிறார்கள். அப்படி ஆறு மாதம் என்பதை ஒரு வருஷம் என்று ஒத்தி போட்டிருந்தால் எவ்வளவோ நன்மையாக இருக்கும். சாதாரணமாக, ஒரு மேயர் ஒரு வருஷம் வரையில் பதவியில் இருப்பது வழக்கம். அப்படி தேர்ந்தெடுக்கப் படுகிற மேயர், அவருக்குள்ள அந்த ஒரு வருஷ காலம் வரவேற்பு உப சாரங்களுக்கும், பிரிவு சாரங்களுக்குமே போதாது. அதற்குத்தான் டைம் இருக்கும். தவிர நகராண்மைக் கழக வேலைகளைப் பார்க்க அவருக்கு டைம் இருக்காது. ஒரு வருட காலம் என்பது மிகக் குறுகிய காலமாத லால் எத்தனையோ திட்டங்கள் அமுல் நடத்தவேண்டுமென்று எண்ணி னாலும்கூட அதை பேப்பரில் தீட்டி அதற்கு உயிர் கொடுக்கு முன்பே இந்த ஒரு வருடம் கழிந்து விடும். அப்படியிருக்க இந்த ஆறு மாதத் திற்கு ஒரு மேயர் என்று சொன்னால் அவர் எப்படித்தான் எதைத்தான் செய்வார் என்று பார்க்கவேண்டும். (இன்ட்டரப்ஷன்) இருக்கிற மேயரே திரும்ப தேர்ந்தெடுக்கப்படுவார் என்பது எப்படித்தெரியும் (இன்ட்டரப்ஷன்) புதிதாக தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர்களுக்கு அவர்கள் மேல் நம் பிக்கை இருக்குமோ என்னவோ எவருக்குத் தெரியும். மேலும் அது ஜனநாயகத்திற்கு, ஜனநாயக தத்துவத்திற்கு விரோதமாகும். நிதிய மைச்சர் அவர்கள் ஒரு விளக்கம். . . .

The Hon. Sri C. SUBRAMANIAM : இப்பொழுது ஆறு மாதத்திற்கு ஒரு மேயர் வந்து எந்தவிதமான காரியமும் செய்யமுடியாது என்று இப்பொழுது ஸிட்டி கார்ப்பரேஷன் அங்கத்தினராக இருக்கும் அம்மை யார் அவர்களே சொல்வார்களானால் இப்பொழுதுள்ள மேயரையே இன்னொரு தேர்தல் இல்லாமலேயே தொடர்ந்து அடுத்த எப்ரல் வரையில் இருக்க சட்ட பூர்வமாக விதி அமைத்து விட்டால் அது அங்கத் தினர் அவர்களுக்கு சம்மதமாயிருக்குமா என்று கேட்டேன்.

Srimathi T. N. ANANDANAYAKI : புதிதாக நவம்பர் மாதத்தில் எப்படியும் மேயரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை யாரும் பறி கொடுக்கத் தயாராயில்லை. நான் சொல்வது ஒரு வருடத்தில் இரண்டு மேயர்களை வைத்து காரியத்தை குழப்புவது நல்லதல்ல. ஆகவே இதை ஒரு வருட மாவது நீடிக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தை கேட்டுக்கொள்கி றேன். அடுத்தபடியாக, இது வரையில் பெண்களுக்கு என்று தனி சீட்கள் ஒதுக்கப்பட்டு வந்தன. இப்பொழுதுள்ள சீர்திருத்தப்படி பெண் களுக்கு என்று இடம் அளிக்கப்படாமல் ஹரிஜனங்களுக்கு மாத்திரம் 10 சீட்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. அதுவும் எப்படியென்றால், ஒவ் வொரு கான்ஸ்டிட்யூவன்ஸியையும் 10 டிவிஷன்களாக பிரித்திருக்கிறார்கள். 100 டிவிஷன்களாக சென்னை நகரத்தைப்பிரித்து அதில் 10 பேர்கள் ஹரிஜனங்களாக இல்லாவிடில் அச்சமுதாயத்திலுள்ள 10 பேர்களை கோவாப்ட் செய்து கொள்ளலாமென்று கூறப்பட்டிருக்கிறது. அந்த தேர் தலில் எவ்வளவு ஹரிஜனங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வருகிறார்களோ அவர் களை குறைத்து மீதியுள்ளவர்களை எடுக்கலாம் என்று இருக்கிறது. அப்படி ஒருவரும் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்றால் 10 பேர்களை கோவாப்ட் செய்து கொள்ளலாம் என்று இருக்கிறது. நான் சொல்வது என்னவென் றால், எவ்வளவு பேர்கள், ஹரிஜனங்கள் எவ்வளவு பேர்கள் தேர்ந்தெடுக் கப் பட்டபோதிலும் சரி, மேலும் ஐந்து பேர்களை எடுக்கலாம் என்று இருக்க வேண்டும். அப்படி 10 ஹரிஜனங்கள் என்று இப்பொழுது இருப்பதை விட ஐந்து ஹரிஜனங்கள், ஐந்து பெண்கள் என்று இருக்கவேண்டும். அதாவது, இப்பொழுது ஹரிஜனங்கள் 10 என்றிருப்பதை குறைத்து ஐந்து பொம்பிள்ளைகளுக்கு கொடுத்தால் நன்றாகயிருக்கும் (சிரிப்பு) பெண்பிள்ளை என்பதை பொம்பிள்ளை என்று கூறுவதில் தவறு ஒன்றுமில்லை. பெண் பிள்ளைகளுக்கு என்று ஒதுக்கப்பட்ட ஸ்தானங்கள் இப்பொழுது நீக்கப் பட்டிருக்கிறது. பெண்கள் இப்பொழுது ஆண்களோடு போட்டி போட வந்து விட்டார்களே ஆகவே அவர்களுக்கு எதற்காக தனி ஸ்தானங்கள் ஒதுக்கவேண்டுமென்று கேட்கலாம். ஆண்களுக்கு முன்பிருந்தது போல் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை இப்பொழுது இல்லையாதலால் பெண்களுக்கு கட்டாயம் தனி ஸ்தானங்கள் ஒதுக்கப்படவேண்டும். "ப்ளாக்ச்சுவேட்டிங் மெம்பர்ஷிப்" என்று....

9th September 1958]

Sri P. G. KARUTHIRUMAN : ஜனத்தொகையில் 51 பர்சன்ட் பெண்களே இருக்கின்றனர். அப்படியிருக்கும்போது பெண்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வரமாட்டார்களோ என்று ஏன் பயப்பட்ட வேண்டும் ?

Srimathi T. N. ANANDANAYAKI : பெண்கள் அவ்வளவு குறுகிய மனப்பான்மையுடையவர்கள் அல்ல. அவர்களது பரந்த மனப்பான்மை காரணமாகத்தான் அவர்கள் ஆண்களுக்கு வோட்டு அளிக்கிறார்கள். பெண்கள், பெண்கள் கட்சி என்று ஆரம்பிப்பது வரையில் பெண்களது வோட்டுகள் பெண்களுக்கே என்று ஒரு கட்சி வரும் வரை ஐந்து ஸ்தானங்கள் அவர்களுக்கு கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் பெண்கள் ஸ்தல ஸ்தாபனங்களில் பங்கு கொள்வதற்குள்ள நல்லதொரு சூழ்நிலை ஏற்படும். அம்மையார் அவர்களே இது சம்பந்தப்பட்ட மந்திரியாக இருக்கும்போது இதைச் செய்வார்கள், இந்த பாதுகாப்பை அளிப்பார்கள் என்று நான் நினைக்கிறேன். சட்ட சபைகளுக்கு பெண்கள் போட்டி போட்டு வருகிறார்களே, அப்படியிருக்க இதற்கு வர முடியாதா போட்டி போட்டு என்று கேட்கலாம். இங்கு குறுகிய அளவு எண்ணிக்கை இருப்பதின் காரணமாக அவர்கள் போட்டி போட்டு வருவது என்பது முடியாது. ஆகவே அவர்கள் வெளியே வராமல் நகராண்மைக் கழகத்தில் அங்கம் வகிக்க முடியாத சூழ்நிலை வந்தாலும் வரும். ஆகவே ஹரிஜனங்களுக்கு 10 ஸ்தானங்கள் என்று ஒதுக்கியிருப்பதை ஐந்து என்றாக்கி மீதி ஐந்து ஸ்தானங்களை பெண்களுக்கு என்று ஒதுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக 53-ல் எந்தெந்த அங்கத்தினர்கள், அங்கத்தினர் பதவிக்கு தகுதியில்லாதவர்கள் (டிஸ் குவாலிபிக்கேஷன்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. கிரிமினல் கோர்ட்டில் குற்றவாளி என்று தண்டிக்கப்பட்டவர்கள், குஷ்டரோகிகள் இவ்விதமாக சிலரை சொல்லப்பட்டிருக்கிறது. அதோடு இன்னொன்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதாவது க்ஷயரோகம் (Tuberculosis) பிடித்திருப்பவர்களும் இதற்கு தகுதியில்லாதவர்கள் என்று இந்த 53-வது செக்ஷனில் சேர்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவ்விதம் இருந்தால் அந்த நோயை பரவாமல் தடுப்பதற்கும் ஒரு நடவடிக்கையாக இருக்கும் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக எலக்டோரல் ரோலில் சில தவறுதல்கள் ஏற்படுகின்றன. அதாவது எனக்கு முன்னால் சில அங்கத்தினர்கள் பேசினது மாதிரி ஆண் பெண்ணாகவும், அய்யங்கார் அப்துல் காதராகவும் மாறி அச்சிடப்பட்டு வருவது சகஜமாக இருந்து கொண்டிருக்கிறது. இது தவிர ஒருவருக்கு உண்மையிலேயே வயது 52 இருக்கும், அவருடைய பெயர் விலாசம் எல்லாம் ரோலில் சரியாக இருக்கும், ஆனால் வயது மாத்திரம் 25 என்றிருக்கும். அப்போது அவர் வோட்டு போட முடியாமல் திரும்ப வேண்டியிருக்கிறது. இவ்விதம் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. இதையும் சரிவர கவனிக்க வேண்டும் அதோடு ரோல் தயாரிக்கும்போது ஒவ்வொரு தெருவுக்கும் தனித்தனி ஷீட்டாக தயாரிக்க வேண்டும். அப்படி யிருந்தால், இப்போது செய்து கொண்டிருப்பது போல், பொதுவாக இருக்கிற லிஸ்டிலிருந்து தெரு தெருவாக தனியாக எடுத்து எழுத வேண்டிய அவசியம் ஏற்படாது. ஆகவே தெரு வாரியாக தனி ஷீட்டில் ரோல் தயாரிக்கவேண்டும் என்பதையும் சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். 1-30 p.m.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 9 a.m. on Wednesday, the 10th September 1958.

The House then adjourned.